॥ श्रीः ॥

॥ ஶ்ரீ: ॥

சிவமயம்

ஶ்ரீ மஹாதேவ ஜயம்



ஶ்ரீமத் ஆதிசங்கர பகவத் பாதாசார்யர்கள் அருளிய
ஸாம்ப பரப்ரம்ம ஸ்தோத்ரம் என்கிற

# ॥ दशश्लोकीस्तुतिः ॥

# ॥ த³ஶஶ்லோகீஸ்துதி: ॥

தமிழ் விரிவுரை :
ஶ்ரீ சங்கரனன்பர்க்கடிமை, ஶ்ரீ சங்கரபாதசேகரன்
சிவபுராண ஞானபூஜகர்
ஆங்கீரஸ **S. வேங்கடேச சர்மா**

**साम्बो नः कुलदैवतं पशुपते साम्ब त्वदीया वयं**
**साम्बं स्तौमि सुरासुरोरगगणाः साम्बेन सन्तारिताः ।**
**साम्बायास्तु नमो मया विरचितं साम्बात्परं नो भजे**
**साम्बस्यानुचरोऽस्म्यहं मम रतिः साम्बे परब्रह्मणि ॥ १ ॥**

**ஸாம்போ³ ந: குலதை³வதம் பஶுபதே ஸாம்ப³ த்வதீ³யா வயம்**
**ஸாம்ப³ம் ஸ்தௌமி ஸுராஸுரோரக³க³ணா: ஸாம்பே³ன ஸந்தாரிதா: ।**
**ஸாம்பா³யாஸ்து நமோ மயா விரசிதம் ஸாம்பா³த்பரம் நோ ப⁴ஜே**
**ஸாம்ப³ஸ்யானுசரோ(அ)ஸ்ம்யஹம் மம ரதி: ஸாம்பே³ பரப்³ரஹ்மணி ॥ 1 ॥**

ஸாம்பன் எங்கள் குலதெய்வம். பசுபதியாகிய ஸாம்ப! நாங்கள் உன்னைச் சேர்ந்தவர்கள். ஸாம்பனை ஸ்தோத்ரம் செய்கிறேன். ஸாம்பனால் தேவர்கள், அஸுரர் கள், நாகர்கள் முதலியவர்களின் கூட்டங்கள் நற்கதி அடைவிக்கப்பட்டார்கள். என்னால் செய்யப்படும் இந்த நமஸ்காரம் ஸாம்பனுக்கு இருக்கட்டும். ஸாம்பனிற் பிறரை நான் ஸேவிக்கமாட்டேன். நான் ஸாம்பனுடைய வேலைக்காரனாக

இருக்கின்றேன். பரப்ரம்மஸ்வரூபமான ஸாம்பனிடத்தில் எனக்கு அன்பு இருக்கட்டும்.

**விளக்கம்: -** 'ஸாம்பன்' என்பது 'அம்பிகையோடு கூடிய பரமசிவன்' என்று பொருள்படும். ஸாம்பன் என்று வரும் இடங்களிலெல்லாம் இம் மாதிரியே பொருள் கொள்க. இந்த ஸ்தோத்திரத்தில் ஸாம்பன் என்ற பதம் முதல் வேற்றுமையிலிருந்து எட்டாம் வேற்றுமை வரை வருவதைக் காண்க.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஸாம்ப | - | ஸாம்பன் | - முதல் வேற்றுமை |
| 2. | ஸாம்பம் | - | ஸாம்பனை | - இரண்டாம் வேற்றுமை |
| 3. | ஸாம்பேன | - | ஸாம்பனால் | - மூன்றாம் வேற்றுமை |
| 4. | ஸாம்பாய | - | ஸாம்பனுக்கு | - நான்காம் வேற்றுமை |
| 5. | ஸாம்பாத் | - | ஸாம்பனில் (ஸாம்பனைத் தவிர) | - ஐந்தாம் வேற்றுமை |
| 6. | ஸாம்பஸ்ய | - | ஸாம்பனுடைய | - ஆறாம் வேற்றுமை |
| 7. | ஸாம்பே | - | ஸாம்பனிடத்தில் | - ஏழாம் வேற்றுமை |
| 8. | பசுபதே ஸாம்ப | - | பசுபதியாகிய ஸாம்பனே! | எட்டாம் வேற்றுமை (விளி) |

அகாரத்தை இறுதியாக உடைய ஆண்பாற் பெயருக்கு (அகாராந்த புல்லிங்கம்) வேற்றுமைகள் சொல்லிக் கொடுப்பவர்கள் இனியாகிலும் ஸாம்ப சப்தம் சொல்லி வைத்து இளமையிலேயே சிவபக்தியைச் சிறுவர்களுக்கு ஊட்டுவார்கள் என நம்புகி றேன்.

**विष्णवाद्याश्च पुरत्रयं सुरगणा जेतुं न शक्ताः स्वयं**
**यं शम्भुं भगवन्वयं तु पशवोऽस्माकं त्वमेवेश्वरः ।**
**स्वस्वस्थाननियोजिताः सुमनसः स्वस्था बभूवुस्ततः**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ २ ॥**

**விஷ்ண்வாத்³யாஶ்ச புரத்ரயம் ஸுரக³ணா ஜேதும் ந ஶக்தா: ஸ்வயம்**
**யம் ஶம்பு⁴ம் ப⁴க³வன்வயம் து பஶவோ(அ)ஸ்மாகம் த்வமேவேஶ்வர: ।**
**ஸ்வஸ்வஸ்தா²னநியோஜிதா: ஸுமனஸ: ஸ்வஸ்தா² ப³பூ⁴வுஸ்தத:**
**தஸ்மின்மே ஹ்ருத³யம் ஸுகே²ன ரமதாம் ஸாம்பே³ பரப்³ரஹ்மணி ॥ 2 ॥**

விஷ்ணு முதலிய தேவர்கள் தாங்களாக திரிபுர ஸம்ஹாரம் செய்யச் சக்தி யற்றவர்களாக இருந்ததனுல் எந்த சம்புவாகிய பரமேச்வரனைச் சரணமடைந்து, 'ஸகல ஐச்வர்யங்களும் நிறைந்த பகவானே! நாங்களோ பசுக்கள். எங்களுக் கெல்லாம் நீரே அடக்கியாளக்கூடிய திறன் வாய்ந்த ஈச்வரன்' என்று சரணமடைந்த பிறகு (அந்தத் திரிபுரர்கள் பரமசிவனுல் ஸம்ஹரிக்கப்பட்டபடியால்) விஷ்ணு முத லிய தேவர்கள் அவரவர் ஸ்தானங்களில் முன்போல் வைக்கப்பட்டவர்களாக மனக்கவலையற்று சுகமாக இருந்தார்களோ அந்த பரப்ரம்மஸ்வரூபமான ஸாம்பனிட

த்தில் என்னுடைய மனம் இன்பத்துடன் விளையாடட்டும் (அதாவது இன்புற்றிருக் கட்டும்)

**விளக்கம்:** - முன்பொரு காலத்தில் திரிபுரர்கள் என்ற அசுரர்கள் மூவுலகையும் ஜெயித்து, இரும்பு, பொன், வெள்ளி ஆகிய மூன்று பட்டினங்கள் வடிவமாக உலகங்களைப் பீடித்து அழித்து வந்தபோது அவர்களை ஸம்ஹரிக்க விஷ்ணு முதலிய தேவர்கள் சக்தியற்றவர்களாக இருந்தார்கள். அவர்களெல்லோரும் ஒன்று கூடி, பரமசிவன் ஒருவர்தான் திரிபுரர்களை வெல்லக்கூடியவர் என்று தீர்மானித்து அப்பெருமானைச் சரணடைத்து, "நாங்கள் பசுக்கள்; தேவரீர் எங்களுக்கெல்லாம் தலைவர். அதாவது பசுபதி. எங்களைக் காக்கவேண்டும்" என்று முறையிட்டார்கள். அவர்களுடைய வேண்டுகோளை ஏற்றுக்கொண்ட பரமசிவனும் திரிபுர ஸம்ஹாரம் செய்து விஷ்ணுவாதி தேவர்களை அவரவர்களது ஸ்தானங்களில் நிலைபெறச் செய்தார். தேவர்களுக்கும் மற்றவர்களுக்கும் அஸுரர்களாலேயோ மற்றவர்களாலேயோ இடர்கள் நேரும் போது பரமசிவனே அவர்களைக் காப்பாற்றுபவர் என்பது இவ்வரலாற்றினின்று தெரிகிறது. பசுக்கள் என்பது தங்களுடைய நன்மை தீமைகளைக்கூட அறிவதற்கு விசேஷ அறிவில்லாத உயிர்க்கூட்டங்கள். பிரம்ம விஷ்ணுவாதி தேவர்களெல்லாம் பசுக்களே யாவர். பரமேச்வரன் ஒருவரே பதி. வேதத்தில் பசுபதி என்று பரமேச்வரனே கூறப்பட்டுள்ளார், (ஸ்ரீ ருத்ரம் காண்க) அப்படிப்பட்ட பசுபதியான பரமேச்வரனிடத்தில் நம் உள்ளம் நிலைத்து. அதனுல் ஏற்படும் சிவானந்த வெள்ளத்தில் திளைக்கவேண்டும் என்பது இச்சுலோகத்தின் கருத்து.

இந்த திரிபுர ஸம்ஹார வரலாறு 'தேஷாமஸுராணும்' என்று ஆரம்பிக்கும் யஜுர் வேத மந்திரத்திலும் கூறப்படுகிறது. மற்றும் கந்தபுராணத்துள் தக்ஷகாண்டம் ததீசியுத்தரப் படலத்திலும் காணலாம்.

**क्षोणी यस्य रथो रथाङ्गयुगलं चन्द्रार्कबिम्बद्वयं**
**कोदण्डः कनकाचलो हरिरभूद्बाणो विधिः सारथिः ।**
**तूणीरो जलधिर्हयाः श्रुतिचयो मौर्वी भुजङ्गाधिपः**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ३ ॥**

**க்ஷோணீ யஸ்ய ரதோ² ரதா²ங்க³யுக³லம் சந்த்³ரார்கபி³ம்ப³த்³வயம்**
**கோத³ண்ட³: கனகாசலோ ஹரிரபூ⁴த்³பா³ணோ விதி⁴: ஸாரதி²: ।**
**தூணீரோ ஜலதி⁴ர்ஹயா: ஶ்ருதிசயோ மௌர்வீ பு⁴ஜங்கா³தி⁴ப-**
**தஸ்மின்மே ஹ்ருத³யம் ஸுகே²ன ரமதாம் ஸாம்பே³ பரப்³ரஹ்மணி ॥ 3 ॥**

திரிபுர ஸம்ஹாரம் செய்யப் புறப்பட்ட போது எந்த பரமேச்வரனுக்கு பூமி ரதமாகவும், சந்திர சூர்யர்கள் இரண்டு சக்கரங்களாயும், பொன்மலையாகிற மேரு பர்வதம் வில்லாகவும், திருமால் அம்பாகவும், பிரம்ம தேவன் தேரோட்டியாகவும், ஸமுத்திரம் அம்பறாத் தூணியாகவும் நான்கு வேதங்களே குதிரைகளாகவும், நாகராஜனுகிய வாசுகி நாண்கயிறுகவும் அமைந்ததோ அப்படிப்பட்ட ஸாம்ப பரமேச்வரனிடத்தில் என்னுடைய உள்ளம் இன்பத்துடன் விளையாடட்டும்.

**விளக்கம்**: - திரிபுர ஸம்ஹாரத்தின் போது தாங்களும் பயன்படவேண்டுமென்று பிரம்மவிஷ்ணுவாதி தேவர்கள் போர்க்குரிய ஸாதனங்களாக ஆனார்கள். தங்கள் ஸஹாயத்தால்தான் பரமசிவன் திரிபுர ஸம்ஹாரம் செய்யப்போவதாக அகந்தையடைந்தார்கள். ஆனால், பரமேச்வரன் அவர்கள் ஸஹாய மில்லாமலேயே தமது சிரிப்பின் மூலமே திரிபுரங்களை எரித்தார் என்பது புராண வரலாறு.

**येनापादित मङ्गजाङ्गभसितं दिव्याङ्गरागैः समं**
**येन स्वीकृतमन्जसंभवशिरः सौवर्णपात्रैः समम् ।**
**येनाङ्गीकृतमच्युतस्य नयनं पूजारविन्दैः समं**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्वे परब्रह्मणि ॥ ४ ॥**

**யேனாபாதி³த மங்க³ஜாங்க³ப⁴ஸிதம் தி³வ்யாங்க³ராகை³: ஸமம்**
**யேன ஸ்வீக்ருதமன்ஜஸம்ப⁴வஶிர: ஸௌவர்ணபாத்ரை: ஸமம் ।**
**யேனாங்கீ³க்ருதமச்யுதஸ்ய நயனம் பூஜாரவிந்தை³: ஸமம்**
**தஸ்மின்மே ஹ்ருத³யம் ஸுகே²ன ரமதாம் ஸாம்வே பரப்³ரஹ்மணி ॥ 4 ॥**

எந்தப் பரமசிவனால் விஷ்ணு புத்ரனான மன்மதன் சாம்பலாக்கப்பட்டானோ எவரால் அந்த சாம்பல் தேவ லோகத்திய சந்தனாதித்ரவ்யங்களோடு சமமாகச் செய்யப்பட்டதோ, எவரால் பிரம்மதேவனுடைய தலை கொய்யப்பட்டுத் தங்கப்பாத்திரங்களுக்குச் சமானமான பிக்ஷாபாத்திரமாக எடுத்துக்கொள்ளப்பட்டதோ எவரால் மஹாவிஷ்ணுவின் கண்ணானது பூஜைக்குரிய தாமரைப்புஷ்பத்துக்குச் சமானமாக ஏற்றுக்கொள்ளப்பட்டதோ அப்படிப்பட்ட பரப்ரம்ம ஸ்வரூபமான ஸாம்ப பரமேச்வரனிடத்தில் என் உள்ளம் இன்பமாக என்றும் விளையாடிக்கொண்டிருக்கட்டும்.

**விளக்கம்**: - பரமசிவன் தக்ஷிணாமூர்த்தியாக ஸனகர், ஸனந்தனர், ஸனத்குமாரர், ஸனாதனர் என்ற நான்கு முனிவர்கட்கு ஞானோபதேசம் செய்துகொண்டிருந்தபோது, அம்பிகையானவள் ஹிமவான் மகளாக அவதரித்து பார்வதி என்னும் பெயருடன் பரமனைப் பதியாக அடையத் தவம் செய்து வந்தாள். இவ்விதம் யோக நிலையிலிருந்த பரமனின் மனதைப் பார்வதியிடம் ஈடுபடச் செய்ய தேவர்கள் ஏவலால் மன்மதன் அவர் மீது புஷ்ப பாணங்களை எய்தான். அப்போது இறைவர் தன் நெற்றிக் கண்ணைச் சிறிதே திறக்க, மன்மதன் சாம்பலானான் என்பது கந்த புராண வரலாறு. பார்வதி கல்யாணம் நடைபெற்ற பிறகு அம்மன்மதனைப் பரமசிவனே பிழைத்தெழச் செய்து அவன் மனைவிக்கு மட்டும் உருவத்துடனிருந்து கொண்டு, மற்றவரிடத்தில் அருவத்துடனேயே தன் தொழிலைச் செய்து கொண்டிருக்கட்டும் என விதித்தார். இங்ஙனம் சிவபெருமானால் எரிக்கப்பட்ட தன் புத்திரனைக் காக்கத் திருமாலாலும் முடியவில்லை என்பது ஈண்டு நோக்கத் தக்கது.

ஒரு சமயம் ஐந்து தலைகளோடு பிரம்மதேவன் இருந்தபோது, உச்சித் தலையானது சிவபெருமானை இகழ்ந்தது, உடனே பரமசிவன் பைரவரைக்கொண்டு உச்சித் தலையைக் கொய் தருளினர். செருக்குற்றிருந்த தேவர்களின் அகந்தையை

அடக்குவதற்காக அத்தலையோட்டினைக்கொண்டு தேவர்களிடம் ரத்த பிக்ஷை பெறுமாறு பைரவரைப் பணித்தார்.

ஒரு சமயம் பரமசிவன் ஜலந்தரன் என்ற அசுரனை ஸம்ஹரிப்பதற்காக தமது கால் பெரு விரலினால் ஒரு சக்கரம் செய்து அதையே சக்கராயுதமாக மாற்றினார். ஜலந்தராசுரன் அச்சக்கரத்தைத் தூக்கித் தலை மீது வைத்துக் கொண்டபோது அது அவனை ஸம்ஹரித்தது. அத்தகைய அரிய சக்கரத்தைச் சிவபெருமானிடமிருந்து திருமால் பெற விரும்பினார். அதற்காகப் பக்தியுடன் நாள்தோறும் ஆயிரம் மலர்களால் சிவலிங்கத்தை அர்ச்சித்து வழிபட்டு வந்தார். ஒரு நாள் அவருக்கு அனுக்ரஹம் புரிய விரும்பிய இறைவன், பூஜைக்குரிய மலர்களில் ஒன்றை மறைத்துவிட, திருமால் தமது ஒரு கண்ணையே மலராக எடுத்து அருச்சித்து வழிபட, அதற்கு மகிழ்ந்து இறைவன் பிரசன்னராகி அவர் வேண்டியபடி சுதர்சனம் என்ற பெயருள்ள சக்கராயுதத்தையும் அவருக்களித்து அனுக்ரஹம் செய்தார்.

மேற்படி வரலாறுகளில் மன்மதனைப் பற்றியதைக் கந்தபுராணம் உற்பத்திக் காண்டம் காமதகனப் படலத்தும், மற்றையவைகளை அதே புராணம் தக்ஷகாண்டம் ததீசி யுத்தரப் படலத்தும் காண்க. சிவபெருமானே எல்லாத் தேவர்களையும் அடக்கி யாள வல்லவன் என்பது இந்த சுலோகத்தின் கருத்து.

**गोविन्दादधिकं न दैवत मिति प्रोचार्य हस्तावुभौ**
**उद्धृत्याथ शिवस्य सन्निधिगतो व्यासो मुनीनां वरः ।**
**यस्य स्तम्भित पाणिरानतिकृता नन्दीश्वरेणाभवत्**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ५ ॥**

**கோ3விந்தா3த3தி4கம் ந தை3வத மிதி ப்ரோசார்ய ஹஸ்தாவுபௌ4**
**உத்3த்4ருத்யாத2 ஶிவஸ்ய ஸந்நிதி4க3தோ வ்யாஸோ முனீனாம் வர: ।**
**யஸ்ய ஸ்தம்பி4த பாணிரானதிக்ருதா நந்தீ3ஶ்வரேணாப4வத்**
**தஸ்மின்மே ஹ்ருத3யம் ஸுகே2ன ரமதாம் ஸாம்பே3 பரப்3ரஹ்மணி ॥ 5 ॥**

மஹரிஷிகளுக்குள் சிறந்த வியாஸ முனிவரானவர் எந்த சிவஸன்னதியிலிருந்துகொண்டு தனது இரண்டு கரங்களையும் உயரத் தூக்கி கோவிந்தனைக் காட்டிலும் மேலான தெய்வம் இல்லையென்று சொல்லி, பிறகு இறைவனைப் பணியாதவர்களைப் பணியவைக்கும் நந்தீச்வரனால் அசைவற்றுத் தூக்கியவாறு இருக்கும்படிச் செய்யப்பட்ட கைகளையுடையவராக இருந்தாரோ அப்படிப்பட்ட பரப்ரம்ம ஸ்வரூபமான ஸாம்ப பரமேச்வரனிடத்தில் என் மனம் இன்பத்துடன் ரமிக்கட்டும்.

**விளக்கம்: -** வேதங்களை வகுத்தும் அதன் கருத்துக்களை 18 புராணங்களாகவும் மஹாபாரதம் என்னும் இதிஹாஸமாகவும் இயற்றியவர் வியாஸ மஹரிஷி. இவர் விஷ்ணுவின் அம்சம். 18 புராணங்களில் 10 புராணங்களைச் சிவபரமாகச் செய்திருந்தும் மோஹத்தினால் மதிமயங்கி வியாஸரானவர் சிவஸன்னிதியில் அபத்தமான வார்த்தைகளைப் பேசினார். அதன் பயனாக நந்தியெம்பெருமானால் தண்டிக்க

ப்பட்டார். சிவபெருமானின் பரத்துவத்திற்கு நந்தியெம் பெருமானுல் அசைவற்றிருக்கும்படிச் செய்யப்பட்ட வியாஸ முனிவரின் கரங்களே ஒரு சாட்சியமாக அமைந்தது. இந்த வரலாறு கீழ்க்கண்ட இரு கந்தபுராணச் செய்யுட்களில் குறிப்பிடப்பட்டுள்ளமை காண்க.

"*ஐயிரு புராணநூ லமலற் கோதியுஞ்*
*செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்*
*மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய*
*கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்*"
(திருநந்திதேவர் வாழ்த்து)

"*பையராவின்மேற் கண்டுயில் பண்ணவன்றனக்குந்*
*தையல் பாதிய னேபரம் பொருளெனுந் தன்மை*
*மையல் மானுடர் உணர்ந்திடமறை முனியெடுத்த*
*கைய தேயுரைத் திட்டதோர் காசியைக் கண்டான்*"
(வழி நடைப்படலம்)

**आकाशश्चिकुरायते दशदिशाभागो दुकूलायते**
**शीतांशुः प्रसवायते स्थिरतरानन्दः स्वरूपायते ।**
**वेदान्तो निलयायते सविनयो यस्य स्वभाव यते**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ६ ॥**

**ஆகாஶஶ்சிகுராயதே த³ஶதி³ஶாபா⁴கோ³ து³கூலாயதே**
**ஶீதாம்ஶு꞉ ப்ரஸவாயதே ஸ்தி²ரதரானந்த³꞉ ஸ்வரூபாயதே ।**
**வேதா³ந்தோ நிலயாயதே ஸவினயோ யஸ்ய ஸ்வபா⁴வ யதே**
**தஸ்மின்மே ஹ்ருத³யம் ஸுகே²ன ரமதாம் ஸாம்பே³ பரப்³ரஹ்மணி ॥ 6 ॥**

எந்த பரமேச்வரனுக்கு ஆகாசம் கேசமாக அமைந்திருக்கிறதோ, பத்து திக்குகளும் வஸ்த்ரம் போல் இருக்கின்றனவோ, குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன் புஷ்பம்போல் இருக்கிருனே, நிலைபெற்ற ஆனந்தமே தன்னுடைய உருவமாக இருக்கின்றதோ, உபநிஷத்துக்களே வாசஸ்தலமாக இருக்கின்றதோ, தேவர்களால் செய்யப்படுகிற வணக்கமே இயற்கையாக அமைந்துள்ளதோ அப்படிப்பட்ட பரப்ரம்மஸ்வரூபியான ஸாம்ப பரமேச்வரனிடத்தில் என் மனம் இன்பத்துடன் ரமிக்கட்டும்.

**விளக்கம்:** - பரமேச்வரன் அங்கிங்கெனுதபடி பரம் பொருளாய் எங்கும் வீற்றிருப்பவர். ஆகையால் அவருக்கு ஆகாயமே தலைமயிராகச் சொல்லப்படுகிறது. 'வ்யோமகேசன்' என்ற திருநாமமும் இதனை வலியுறுத்தும். திகம்பரன் என்னும் திருநாமம் அவர் திக்குகளையே ஆடையாகக் கொண்டவர் என்பதைத் தெரிவிக்கிறது. சந்திரசேகரன், சந்திரமௌலீ என்ற திருநாமங்களும், மதிசூடி, பிறைசூடி, மாதர்பிறைக் கண்ணியான் என்பன போன்ற தேவார வாக்குகளும் எம்பெருமான் தலையில் சந்திரனைப் புஷ்பம்போல் தரித்திருக்கிருர் என்பதைக் காட்டுகின்றன.

மேலும் ஆகாசம் சிகையாக அமைந்ததால், அவ்வாகாயத்தில் உள்ள சந்திரன் சிகையில் சூடும் மலர் போன்றவன் என்பதும் பொருத்தமே. பரப்ரம்மஸ்வரூபமானது ஸத், சித், ஆனந்தவடிவமானது என்று வேதத்தில் கூறப்பட்டுள்ளபடியால் இங்கு நிஜலபெற்ற பேரானந்தத்தையே பரமசிவனுடைய ஸ்வரூபமாக வர்ணிக்கப்பட்டுள்ளது. 'ஆனந்தோ ப்ரஹ்மேதி வ்யஜனாத்' என்ற தைத்திரிய உபநிஷத் வாக்யமும் இங்கு கருதற்குரியது. ஸகல உபநிஷத்துக்களின் ஸாரம் சிவதத்வமாகையால் உபநிஷத்துக்களே சிவபெருமானின் இருப்பிடம் என்று சொல்லப்படுகிறது.

**वेदान्तेषु यमाहुरेकपुरुषं व्याप्य स्थितं रोदसी**
**यस्मिन्नीश्वर इत्यनन्य विषयो शब्दो यथार्थाक्षरः ।**
**अन्तर्यश्च मुमुक्षुभिर्नियमितप्राणादिभिर्मृग्यते**
**स स्थाणुः स्थिरभक्तियोग सुलभो निःश्रेयसायास्तु वः ॥**

**வேதா³ந்தேஷு யமாஹுரேகபுருஷம் வ்யாப்ய ஸ்தி²தம் ரோத³ஸீ**
**யஸ்மின்னீஶ்வர இத்யனன்ய விஷயோ ஶப்³தோ³ யதா²ர்தா²க்ஷர: ।**
**அந்தர்யஶ்ச முமுக்ஷுபி⁴ர்நியமிதப்ராணாதி³பி⁴ர்ம்ருக்³யதே**
**ஸ ஸ்தா²ணு: ஸ்தி²ரப⁴க்தியோக³ ஸுலபோ⁴ நி:ஶ்ரேயஸாயாஸ்து வ: ॥**

என்ற காளிதாசனின் ஸ்தோத்ரமும் இங்கு ஒப்பு நோக்கற்குரியது. தேவர்கள் எப்பொழுதும் பரமசிவன் திருவடிகளில் தங்கள் மணிமுடிகள் தோய வணங்கும் இயல்புடையவர்கள் என்பது

**कथं पश्येयं मां स्थगयति नमः संभ्रमजुषां**
**निलिम्पानां श्रोणिर्निजकनकमाणिक्यमकुटैः ॥ १७॥**

**கத²ம் பஶ்யேயம் மாம் ஸ்த²க³யதி நம: ஸம்ப்⁴ரமஜுஷாம்**
**நிலிம்பாஞம் ஶ்ரோணிர்நிஜகனகமாணிக்யமகுடை: ॥ 17॥**

என்ற சிவானந்த லஹரி ஸ்லோகத்தால் அறியப்படும்.

**विष्णुर्यस्य सहस्रनामनियमादम्भोरुहाण्यर्चयन्**
**एकोनोपचितेषु नेत्रकमलं नैजं पदाब्जद्वये ।**
**सम्पूज्यासुरसंहतिं विदलयंस्त्रैलोक्यपालोऽभवत्**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ७ ॥**

**விஷ்ணுர்யஸ்ய ஸஹஸ்ரநாமநியமாத³ம்போ⁴ருஹாண்யர்சயன்**
**ஏகோஞேபசிதேஷு நேத்ரகமலம் நைஜம் பதா³ப்³ஜத்³வயே ।**
**ஸம்பூஜ்யாஸுரஸம்ஹதிம் வித³லயம்ஸ்த்ரைலோக்யபாலோ(அ)ப⁴வத்**
**தஸ்மின்மே ஹ்ருத³யம் ஸுகே²ன ரமதாம் ஸாம்பே³ பரப்³ரஹ்மணி ॥ 7 ॥**

எந்த பரமசிவனுடைய பாதத்தாமரைகளில் மஹா விஷ்ணுவானவர் ஸஹஸ்ரநாம அர்ச்சனை நியமத்தில் தாமரை மலர்களை அர்ச்சித்துக்கொண்டு வருகையில் சிவ சங்கல்பத்தால் ஒரு புஷ்பம் குறைந்தபோது, தன்னுடைய கண்ணாகிற தாமரையை எடுத்துப் பூஜை செய்து (அதன்மூலம் சக்கராயுதத்தைப் பெற்று) அஸுரக் கூட்டத்தை அழித்து, மூன்று உலகிற்கும் காவற்கடவுளாக ஆனாரோ, அந்த பரப்ரம்மஸ்வரூபமான ஸாம்ப பரமேச்வரனிடத்தில் என் ஹிருதய மானது அன்புடன் நிலைத்திருக்கட்டும்.

**விளக்கம்:** - தாமரை மலருக்குப் பதிலாகக் கண்ணை அர்ச்சித்ததாலேயே திருமாலுக்குத் தாமரைக் கண்ணன் என்ற பெயர் ஏற்பட்டது. அரவிந்தாக்ஷன், புண்டரீகாக்ஷன் என்பன போன்ற நாமங்களை நோக்குக. திருமால் தன் கண்ணையே தாமரை மலராக அர்ச்சித்த வரலாறு 4 வது சுலோகம் விளக்கவுரையில் கொடுக்கப் பட்டுள்ளது. இவ்வரலாற்றினை வலியுறுத்தும் சில பாடல்களைக் கீழே கொடுத்துள் ளோம்.

"*அவன்சலந் தரனை வீட்டும் ஆழியை வாங்கப் பன்னாள்*
*சிவன்கழல் வழிபட் டோர்நாள் செங்கணே மலராச் சாத்த*
*உவந்தனன் விடைமேல் தோன்றி அப்படை உதவப் பெற்று*
*நிவந்தனன் அதனால் வையம் நேமியான் என்பமாதோ.*"
(ததீசியுத்தரப் படலம் -297 : கந்தபுராணம்)

"*பாராழி வட்டம் பகையால் நலிந்தாட்ட ஆடிப்*
*பேராழி யானதிடர் கண்டருள் செய்தல் பேணி*
*நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்டவர்க்குப்*
*போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே.*"
(திருஞானசம்பந்தர் தேவாரம்)

"*மாலாயிரங் கொண்டு மலர்க்கண் ணிடஆழி.*
*ஏலா வலயத்தோ டீந்தான் உறைகோயில்*
*சேலா கியபொய்கைச் செழுநீர்க் கமலங்கள்*
*மேலா லெரிகாட்டும் வீழி மிழலையே*'
(திருஞான சம்பந்தர் தேவாரம்)

"*சலமுடைய சலந்தரன்றன் உடல் தடிந்த நல்லாழி*
*நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடீ*
*நலமுடைய நாரணன்றன் நயனமிடந் தரனடிக்கீழ்*
*அலராக இட ஆழி அருளினன்காண் சாழலோ.*"
(திருவாசகம் - திருச்சாழல்)

மேலும் வைணவர்களுடைய பரமபிரமாணமான திருவாய்மொழியிலும் "செக்கர்வா னச் சடையோன் சேவடிக் கீழந்நாளின், மெய்க்கணிட்டுச் சக்கர நீ பெற்ற விளையா

ட்டே போல்" என்ற வரிகளில் இவ்வரலாறு பற்றிக் கூறப்பட்டுள்ளது என்றும் ஆனுல் அவ்வரிகள் இப்பொழுதைய அச்சிட்ட பிரதிகளில் காணப்படவில்லையென்றும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் வெளியிட்ட 'சுருதி சூக்திமாலை' என்னும் நூலில் ஹரதத்தாசார்யர் சரிதம் 7 ம் பக்கம் அடிக் குறிப்பிலிருந்து தெரிய வருகிறது.

**शौरिं सत्यगिरं वराहवपुषं पादाम्बुजादर्शने**
**चक्रे यो दयया समस्तजगतां नाथं शिरोदर्शने |**
**मिथ्यावाचमपूज्यमेव सततं हम्सस्वरूपं विधिं**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ८ ॥**

**ஶௌரிம் ஸத்யகி³ரம் வராஹவபுஷம் பாதா³ம்பு³ஜாத³ர்ஶனே**
**சக்ரே யோ த³யயா ஸமஸ்தஜக³தாம் நாத²ம் ஶிரோத³ர்ஶனே ।**
**மித்²யாவாசமபூஜ்யமேவ ஸததம் ஹம்ஸஸ்வரூபம் விதி⁴ம்**
**தஸ்மின்மே ஹ்ருத³யம் ஸுகே²ன ரமதாம் ஸாம்பே³ பரப்³ரஹ்மணி ॥ 8 ॥**

உண்மையான வார்த்தைகளைப் பேசுபவரும், பரமசிவனுடைய தாமரை மலர் போன்ற பாதங்களைக் காணும் முயற்சியில் பன்றியின் சரீரத்தை எடுத்துக் கொண்ட வருமான மஹாவிஷ்ணுவைக் கருணையுடன் எந்தப் பரமசிவன் ஸகல உலகங்களு க்கும் நாதனுகச் செய்தாரோ, தலையைப் பார்க்கும் முயற்சியில் அன்னத்தின் வடிவ மெடுத்துச் சென்றவரும் தலையைப் பார்க்காமலேயே பார்த்தேன் என்று அசத்திய மான வார்த்தைகளைக் கூறியவருமான பிரம்மதேவனை எப்பொழுதும் பூஜிக்கத் தகாதவராகச் செய்தாரோ அத்தகைய பரப்ரம்மஸ்வரூபமான ஸாம்ப பரமேச்வரனிட த்தில் என்னுடைய உள்ளம் எப்பொழுதும் இன்பத்துடன் ரமித்திருக்கட்டும்,

**விளக்கம்:** - பிரம்ம விஷ்ணுக்கள் தங்களுக்குள் யார் பெரியவர் என்று தீர்மானிக்க யுத்தம் செய்த போது பரமசிவன் ஜோதிஸ்வரூபமாய் ஆகாயத்தையும் பூமியையும் அளாவி நிற்கும்போது அந்த ஜோதிர்லிங்கத்தின் அடியையோ முடியை யோ காண்பவரே பெரியவர் என்ற அசரீரியின் வாக்குப்படி விஷ்ணு வராஹரூபம் கொண்டு பூமியைக் குடைந்துகொண்டு அவர் பாதங்களைத் தரிசிக்கச் சென்ருர். பிரம்மதேவர் அன்னப் பக்ஷியின் வடிவம் கொண்டு சென்று முடியைக் காணச் சென்ருர். இங்ஙனம் இரண்டு பேரும் வெகுநாள் முயற்சித்தும் அந்த ஜோதியின் அடி முடி காண இயலாமல், புறப்பட்ட இடத்திற்கே திரும்பி வரவும் சக்தியில்லாமல் துன்புற்ருர்கள். பிறகு பரமேச்வரனைத் தியானித்து புறப்பட்ட இடத்திற்கே திரும்பி வந்தார்கள். விஷ்ணுவானவர் தான் பாதங்களைக் காணுமையை ஒப்புக்கொண்டு உண்மை பேசவே அவரை எல்லோராலும் பூஜிக்கத் தகுந்தவராகவும், பிரம்மனுவர் தான் தலையைக் கண்டுவிட்டதாகவும் அதற்கு சிவபெருமான் தலையிலிருந்து விழுந்த ஒரு தாழம்பூ சாக்ஷி என்றும் பொய் சொல்லியதால் அவரைப் பூஜிக்கத் தகாதவராகவும் செய்தார். இவ்விதம் பிரம்ம விஷ்ணுக்களாலும் கண்டுபிடிக்க முடியாத பெரும் சக்தி வாய்ந்தவர் பரமேச்வரன் என்பது இந்த சுலோகத்தின் கருத்தாகும். இவ்வரலாற்றை விரிவாக கந்தபுராணம் - அடிமுடி தேடிய படலத்தில்

காணலாம். பிரம்ம தேவன் பொய் கூறியது சிவ மஹா புராணத்தில் கூறப்பட்டு ள்ளது.

பரமேச்வரன் பிரம்ம விஷ்ணுக்களாலும் காணற்கரியவன் என்பது,

**“हरिब्रह्मादीनामपि निकटभाजामसुलभं”**

**“ஹரிப்³ரஹ்மாதீ³நாமபி நிகடபா⁴ஜாமஸுலப⁴ம்”**

என்ற சிவானந்தலஹரி வாக்யத்திலுலும், மற்றும் கீழ்க்கண்ட ஞானசம்பந்தர் தேவா ரத்தாலும் அறியலாம்.

*“தாணுதல் செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்*
*நீணுதல் செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளம் கவர் கள்வன்*
*வாணுதல் செய்மக ளீர் முதலாகிய வையத்தவ ரேத்தப்*
*பேணுதல் செய்பிர மாபுரம் மேவிய பெம்மானிவனன்றே.”*

திருஞானசம்பந்தர் தாம்பாடிய எல்லாப் பதிகங்களிலும் 9 - ம் திருப்பாடலில் இவ்வரலாற்றைக் குறிப்பிட்டுள்ளார். மஹாவிஷ்ணுவுக்கு உலகத்தவரால் பூஜிக்கப் படும் பெருமை பரமேச்வரனுடைய ப்ரஸாதத்தாலேயே கிடைத்தது என்பது பின்வரும் சிவானந்தலஹரி சுலோகத்தாலும் அறியலாம்.

**बाणत्वं वृषभत्वमर्धवपुषा भायर्यात्वमायर्यापते**
**घोणित्वं सखिता मृदङ्गवहता चेत्यादिरूपं दधौ ।**
**त्वत्पादे नयनार्पणं च कृतवान् त्वद्देहभागो हरिः**
**पूज्या पूज्यतरस्स एव हि न चेत् को वा तदन्योऽधिकः ॥**

**பா³ணத்வம் வ்ருஷப⁴த்வமர்த⁴வபுஷா பா⁴யர்யாத்வமாயர்யாபதே**
**கோ⁴ணித்வம் ஸகி²தா ம்ருத³ங்க³வஹதா சேத்யாதி³ரூபம் த³தௌ⁴ ।**
**த்வத்பாதே³ நயனார்பணம் ச க்ருதவான் த்வத்³தே³ஹபா⁴கோ³ ஹரி:**
**பூஜ்யா பூஜ்யதரஸ்ஸ ஏவ ஹி ந சேத் கோ வா தத³ன்யோ(அ)தி⁴க: ॥**

**यस्यासन्धरणीजलाग्निपवन व्योमार्कचन्द्रादयः**
**विख्यातास्तनवोऽष्टधा परिणता नान्यत्ततो वर्तते ।**
**ओङ्कारार्थविवेचनी श्रुतिरिय चाचष्टतुर्य शिवं**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ९ ॥**

**யஸ்யாஸந்த⁴ரணீஜலாக்³னிபவன வ்யோமார்கசந்த்³ராத³ய:**
**விக்²யாதாஸ்தனவோ(அ)ஷ்டதா⁴ பரிணதா நான்யத்ததோ வர்ததே ।**
**ஓங்காரார்த²விவேசனீ ஶ்ருதிரிய சாசஷ்டதுர்ய ஶிவம்**
**தஸ்மின்மே ஹ்ருத³யம் ஸுகே²ன ரமதாம் ஸாம்பே³ பரப்³ரஹ்மணி ॥ 9 ॥**

நிலம், நீர், தீ, வாயு, ஆகாயம், சூர்யன், சந்திரன், ஆன்மா முதலிய எட்டு விதமான புகழ்பெற்ற சரீரங்கள் எந்த பரமேச்வரனுக்கு இருக்கின்றனவோ, எந்த அஷ்டமூர்த்தியான பரமசிவனைக் காட்டிலும் வேறு ஒரு பொருள் இல்லையோ, ஓங்காரத்தின் பொருளை விளக்குவதற்காகவே ஏற்பட்ட இந்த மாண்டுக்ய ச்ருதியும் (மாண்டூக்ய உபநிஷத்) எந்த பரமசிவனை ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்தி என்ற இந்த மூன்று நிலைகளிலும் இருக்கும் விச்வம், தைஜஸன், ப்ராக்ஞன் என்ற மூவரைக் காட்டிலும் வேறான நான்காவதாகவும், மங்களஸ்வரூபியாகவும் சொல்லுகிறதோ அப்படிப்பட்ட பரப்ரம்மஸ்வரூபியான ஸாம்ப பரமேச்வரனிடத்தில் என்னுடைய உள்ளம் இன்பத்துடன் விளையாடட்டும்.

**விளக்கம்:** - பரமசிவன் அஷ்டமூர்த்தி என்பது 'அஷ்டமூர்த்தயே நம:' என்ற சிவ அஷ்டோத்தர சதநாமாவளியிலிருந்தும் பின் காணும் தேவார திருவாசக வாக்குகளிலிருந்தும் அறியலாம்.

*"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி*
*இயமான னாயெறியுங் காற்று மாகி*
*அருநிலைய திங்களாய் ஞாயி றாகி*
*ஆகாச மாயட்ட மூர்த்தி யாகிப்*
*பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும்*
*பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி*
*நெருநலையாய் இன்றாகி நாளை யாகி*
*நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே"*
(அப்பர் சுவாமிகள் - நின்ற திருத்தாண்டகம்)

*"நிலம் நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்*
*புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்*
*உலகே ழெனத்திசை பத்தெனத்தான் ஒருவனுமே*
*பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ"*
(திருவாசகம் : திருத்தோணோக்கம்)

அஷ்ட மூர்த்தியான பரமேச்வரனைக் காட்டிலும் வேறான இன்னொன்று கிடையாது என்பதைப் பின் வரும் தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம் சுலோகத்தினின்றும் அறிய லாம்.

**भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमान्**
**इत्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम्**
**नान्यत्किञ्चन विद्यते विमृशतां यस्मात्परस्माद्विभोः**
**तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ९ ॥**

**பூ⁴ரம்பா⁴ம்ஸ்யனலோ(அ)னிலோ(அ)ம்ப³ரமஹர்நாதோ² ஹிமாம்ஶு꞉ புமான்**
**இத்யாபா⁴தி சராசராத்மகமித³ம் யஸ்யைவ மூர்த்யஷ்டகம்**
**நான்யத்கிஞ்சன வித்³யதே விம்ருஶதாம் யஸ்மாத்பரஸ்மாத்³விபோ⁴꞉**
**தஸ்மை ஸ்ரீகு³ருமூர்தயே நம இத³ம் ஸ்ரீத³க்ஷிணாமூர்தயே ॥ 9 ॥**

ஓம் என்கின்ற பிரணவத்தின் பொருளேயே விளக்க வந்த மாண்டுக்ய உபநிஷத்தில்

**प्रपञ्चोपरामं शान्तं शिवमद्वैतं चतुर्थ मन्यन्ते**

**ப்ரபஞ்சோபராமம் ஶாந்தம் ஶிவமத்³வைதம் சதுர்த² மன்யந்தே**

என்று கூறப்பட்டுள்ள விஷயமே இச் சுலோகத்தின் பிற்பகுதியில் குறிப்பிடப்பட்டு ள்ளது.

**विष्णुब्रह्म सुराधिपप्रभृतयः सर्वेऽपि देवा यदा**
**सम्भूताज्जलधेर्विषात्परिभव प्राप्तास्तदा सत्वरम् ।**
**तानार्तान् शरणागतानिति सुरान् योऽरक्षदर्धक्षणात्**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ १० ॥**

**விஷ்ணுப்³ரஹ்ம ஸுராதி⁴பப்ரப்⁴ருதய꞉ ஸர்வே(அ)பி தே³வா யதா³**
**ஸம்பூ⁴தாஜ்ஜலதே⁴ர்விஷாத்பரிப⁴வ ப்ராப்தாஸ்ததா³ ஸத்வரம் ।**
**தாஞர்தான் ஶரணக³தானிதி ஸுரான் யோ(அ)ரக்ஷத³ர்த⁴க்ஷணத்**
**தஸ்மின்மே ஹ்ருத³யம் ஸுகே²ன ரமதாம் ஸாம்பே³ பரப்³ரஹ்மணி ॥ 10 ॥**

பிரம்மா, விஷ்ணு தேவேந்திரன் முதலிய ஸகல தேவர்களும் சமுத்திரத்திலி ருந்து உண்டான ஹாலாஹல விஷத்திலிருந்து பரிபவத்தை எப்பொழுது அடைந்தா ர்களோ அப்பொழுது விரைவாகத் துன்பமுற்ற அந்த தேவர்களை சரணமடைந்தார்கள் என்ற ஒரே காரணத்தினுல் எந்தப் பரமசிவன் அரைக்ஷணத்தில் காப்பாற்றினுரோ அப்படிப்பட்ட பரப்ரம்மஸ்வரூபமான ஸாம்ப பரமேச்வரனிடத்தில் என் மனம் இன்ப த்துடன் ரமித்திருக்கட்டும்.

**விளக்கம்:** - தேவர்களும் அசுரர்களும் பிரம்ம விஷ்ணுவாதியர்களின் துணையுடன் அம்ருதத்தை எடுக்க பாற்கடலைக் கடைந்தார்கள். அப்பொழுது பாற்கட லிலிருந்து கிளம்பிய நஞ்சும், அப்பாற்கடலைக் கடையப் பயன்பட்ட நாணுகிய வாசுகி என்னும் பாம்பரசனின் விஷமும் சேர்ந்து ஒன்ருகித் தேவாசுரர்களைத் துன்புறுத்தி யது. அதனின்றும் மீள வழியறியாமல் விஷ்ணு, பிரம்மா, இந்திரன் முதலிய ஸகல தேவர்களும் பரமசிவனிடம் சரணடைந்தார்கள். சரணமடைந்தவர்களைக் காக்க வேண்டும் என்ற இறைவனின் இயல்பான கருணையினுல் அவ்விஷத்தை உண்டு அத்தேவர்களை அரைக்ஷண நேரத்தில் காப்பாற்றினுர். மேலும் அவ்விஷத்தினை வெளியிலும் விடாமல், வயிற்றுள்ளும் செலுத்தாமல் கழுத்திலேயே நிலைநிறுத்தி யருளினுர். அதனுல் அவருடைய கழுத்தில் நீல நிறம் ஏற்பட்டது. இந்த வரலாறு

கந்த புராணம் தக்ஷ காண்டம் ததீசி உத்தரப் படலத்துள் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பரமசிவன் நீலகண்டன், காலகண்டன், ஸ்ரீகண்டன், நீலக்கிரீவன், முதலிய அருமைத் திருநாமங்களால் அழைக்கப்படுவதும் இது பற்றியேயாகும் .ஸ்ரீருத்ரத்தில் நீலக்கிரீவன் என்ற திருநாமம் வருவதையும் காண்க. இச்செயற்கரிய செயலை விளக்கும் சிவானந்தலஹரி சலோகங்கள் வருமாறு: -

**नालंवा परमोपकारकमिदं त्वेकं पशूनां पते**
**पश्यन् कुक्षिगतान् चराचरगणान् बाह्यस्थितान् रक्षितुम् ।**
**सर्वामित्र्यपलायनौषधमतिज्वालाकरं भीकरं**
**निक्षिप्तं गरलं गले न गिलितं नोद्गीर्णमेव त्वया ॥ ३१ ॥**

**ज्वालोग्रः सकलामसतिभयदः क्ष्वेलः कथं वा स्वया**
**दृष्टः कि च करे धृतः करतले कि पक्वजम्बूफलम् ।**
**जिह्वायां निहितश्च सिद्धधुटिका वा कण्ठदेशे भृतः**
**कि ते नीलमणिर्विभूषणमयं शम्भो महात्मन् वद ॥ ३२ ॥**

**நாலம் வா பரமோபகாரகமித³ம் த்வேகம் பஶூனாம் பதே**
**பஶ்யன்குக்ஷிக³தாம்ஶ்சராசரக³ணான்பா³ஹ்யஸ்தி²தான் ரக்ஷிதும் ।**
**ஸர்வாமர்த்யபலாயனௌஷத⁴மதிஜ்வாலாகரம் பீ⁴கரம்**
**நிக்ஷிப்தம் க³ரலம் க³லே ந கி³லிதம் நோத்³கீ³ர்ணமேவ த்வயா ॥ 31 ॥**

**ஜ்வாலோக்³ர: ஸகலாமராதிப⁴யத³: க்ஷ்வேல: கத²ம் வா த்வயா**
**த்³ருஷ்ட: கிம் ச கரே த்⁴ருத: கரதலே கிம் பக்வஜம்பூ³ப²லம் ।**
**ஜிஹ்வாயாம் நிஹிதஶ்ச ஸித்³த⁴கு⁴டிகா வா கண்ட²தே³ஶே ப்⁴ருத:**
**கிம் தே நீலமணிர்விபூ⁴ஷணமயம் ஶம்போ⁴ மஹாத்மன் வத³ ॥ 32 ॥**

ஹாலாஹல விஷத்தை அருந்தி தேவஸ்த்ரீகளின் மங்கல நாணைக் காத்த இந்தச் செய்தி பல தேவாரத்திருப்பாடல்களிலும் திருவாசகத்திலும் குறிப்பிட்டுள்ளது, அவற்றுள் சிலவற்றை ஈண்டுத் தருதும்.

*"மாலா யவனும் மறைவல்ல நான்முகனும்*
*பாலா தேவர்பக ரில்லமு தூட்டல் பேணிக்*
*காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த*
*ஆலாலம் உண்டங்கம ரர்க்கருள் செய்த தாமே"*
(திருஞானசம்பந்தர் - திருப்பாசுரம்)

*"கடிக்கும்மர வால்மலை யாலமரர்*
*கடலைக்கடை யவ்வெழு காளகூடம்*
*ஒடிக்கும்முல கங்களை யென்றதனை*
*உமக்கேஅமு தாகவுண்டீர் உமிழீர்*

*இடிக்கும்மழை வீழ்த்திழுத் திட்டருவி*
*யிருபாலுமோ டிய்யிரைக் குந்திரைக்கை*
*அடிக்கும் புனல் சேரரி சிற்றென் கரை*
*அழகார்திருப் புத்தூர் அழகனீரே."*
(சுந்தரர் தேவாரம்)

"*கோல மால்வரை மத்தென நாட்டிக்*
*கோள ரவ்வுசுற் றிக்கடைந் தெழுந்த*
*ஆல - நஞ்சுண் டவர்மிக இரிய*
*அமரர் கட்கருள் புரிவது கருதி*
*நீல மார்கடல் விடந்தனை யுண்டு*
*கண்டத் தேவைத்த பித்தநீ செய்த*
*சீலங் கண்டுநின் திருவடி அடைந்தேன்*
*செழும்பொ ழில்திருப் புன்கூருளானே."*
(சுந்தரர் தேவாரம்)

"*கோலால மாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த*
*ஆலால முண்டா னவன்சதுர்தான் என்னேடீ*
*ஆலால முண்டிலனேல் அன்றயன்மா லுள்ளிட்ட*
*மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ."*
(திருவாசகம் - திருச்சாழல்)

**ஆசிரியர் குறிப்பு:** - தசச்லோகீ என்ற இந்த சிறந்த ஸ்தோத்ரம் ஆதிசங்கர பகவத் பாதாசார்யர்களால் பரமேச்வரனுடைய தனித் தலைமைத் தன்மையை விளக்கி எழுதப்பட்டது. "ஸஹஸ்ரம் வர்த் தந்தே ஜகதி விபுதா: க்ஷத்ரபலதா: நமன்யே ஸ்வப் நேவா ததநு சரணம் தத்க்ருதபலம்" என்று ஆதி சங்கரரே சிவானந்த லஹரியில் கூறியபடியும், "சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோமல்லோம். சிவ பெருமான் சேவடியே சேரப் பெற்றேம்" அப்பர் சுவாமிகளும் கூறியவண்ணம் சிவானந்தப் பெருவாழ்விலேயே ஈடுபடுத்தும் பெருமையுடையது. 'சிவ ஏகோத்யேய: சிவம் கர: ஸர்வமன்யத் பரித்ய ஜ்ய' அதாவது பேரின்பத்தைத் தரும் சிவபெருமான் ஒருவனே ஏனைய எல்லோரையும் விலக்கிவிட்டுத் தியானிக்கத் தக்கவன் என்ற அதர்வ சிகோப நிஷத் வாக்யப்படி சிவபெருமானுடைய முழு முதல் தன்மையை நன்கு விளக்கிக் கூறுகிறது. சிவபெருமான் ஒருவனே பிரம்ம விஷ்ணுவாதி தேவர்களை ரக்ஷிப்பவரென்றும் அவர்கள் தவறு செய்யும்போது அவர்களை சிக்ஷிப்ப வரென்றும் இந்நூலில் நன்கு விளக்கிக் காட்டப்பட்டுள்ளது. இந்நூலில் உள்ள விஷயங்களுக்கு வேதம், புராணம், இதிஹாஸம், தேவாரம், திருவாசகம் முதலிய வற்றிலிருந்து ஏராளமான மேற் கோள்கள் காட்டமுடியும் என்றாலும் விரிவஞ்சி ஒரு சில மேற்கோள்களே காட்டப்பட்டுள்ளன: அன்பர்கள் இதனைப் படித்துப் பயன டையுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

**சுபம்**